# கல்யாணத்துக்குப் பிறகு காதல் புரியலாமா?



# கல்யாணத்துக்குப்
# பிறகு
# காதல் புரியலாமா?

வல்லிக்கண்ணன் எழுதியது

விலை 3 அணா.

பதிப்பாளர்:

எம். சூரி
14-எ. குப்பையர் தெரு,
சென்னை-1.

கலையகம் வெளியீடு—8
முதற்பதிப்பு—மார்ச், 1950.

# வல்லிக்கண்ணன்

எழுதியவை



| | | | |
|---|---|---|---|
| விடியுமா? | 1 | 0 | 0 |
| ஒய்யாரி | 0 | 8 | 0 |
| அத்தை மகள் | 0 | 4 | 0 |

முத்துக்குமரன் அச்சகம், சென்னை-1 20-2-50.

# கல்யாணத்துக்குப்
## பிறகு
# காதல் புரியலாமா?

கல்யாணத்துக்குப் பிறகு காதல் புரியலாமா?

இது விசித்திரமான கேள்வியாகத் தோன்றும். இதை விட விநோதமாக ஒலிக்கலாம், 'கல்யாணத்துக்குப் பிறகு தான் காதல் அவசியமாகிறது. மணமான கணவனும் பெண்ணும் பரஸ்பரம் காதல் வாடிவிடாமல் வளர்க்க வேண்டும்' என்கிற பதில்.

இதில் விசித்திரத்திற்கோ, விநோதத்திற்கோ இடமில்லை கண்டதும் காதல், கேட்டதும் காதல், போட்டோ பார்த்துக் காதல், பழகிப் பழகிக் காதல், கடிதம் மூலம் காதல் என்று எந்த ரீதியில் காதல் புரிந்து கல்யாணமானவர்களாக இருப்பினும் சரி காதல் எனும் பேச்சே இல்லாமல் சேர்த்து வைக்கப் படுகிற ஆண் பெண்ணாக யிருப்பினும் சரி. அவர்களுடைய உண்மையான வாழ்க்கை கல்யாணத்துக்குப் பிறகு தான் ஆரம்பமாகிறது.

காதல் வளர்த்து மணச் சோலையிலே புகுந்த யுவ யுவதிகளின் கதை கல்யாணத்தோடு முடிந்து விடவில்லை. உண்மையில், கல்யாணத்திலிருந்து தான் இன்ப வாழ்வின் சோதனை தொடங்குகிறது அவர்களுக்கு.

இங்கிலையில், அதுவரை பார்த்துப் பேசியிராத ஆண் பெண்கள் ஜோடி கூடும்போது ஏற்படுகிற நெருக்கடியைப் பற்றிக் கூறவா வேண்டும்!

புதிதாகச் சந்திக்கிற ஆண்களும் பெண்களுமே முதலில் என்ன பேசுவது, எப்படிப் பழகுவது என்று முழித்துத் திணறுவது இயல்பு. அறிமுகமானவர்கள் கூட எப்பவாவது சந்திக்கும் போது பழகவும் பேசவும்

தெரியாதவர்கள் போல் நெருக்கடியான நிலையில் சிக்கச் சேர்கிறது. தாராளமாகப் பழகும் நவயுக இளைஞர்களும் யுவதிகளும் கூட ஆரம்பத்தில் சந்திக்கிற போது திணறுவது சகஜம். பேசிப் பழகக் கூச்சமும், பரஸ்பரம் அபிப்பிராயமும் அன்பும் பரிமாறிக் கொள்ளத் துணிவும் இல்லாதவர்களாகி விடுகிறார்கள்.

கல்யாணம் எனும் சடங்கு வலுக் கட்டாயமாகச் சேர்த்து வைக்கிற ஆணுக்கும் பெண்ணுக்கும்—வாழ்வு பூராவும் இணைந்து உள்ளமும் உடலும் ஒட்டிப் பழக வேண்டிய யுவனுக்கும் யுவதிக்கும் எதிர்ப்படுகிற நெருக்கடிகள் அதிகமே. கூச்சமும் வெட்கமும் பெண்ணின் குறைகள் என்று சொல்ல முடியாது. இக் குணங்கள் ஆணுக்கும் உண்டு.

எவனோ ஒருவனையும் எவளோ ஒருத்தியையும் சேர்க்கிற கல்யாணத்தில், தமிழ் நாட்டில் முன்பு நடைமுறையிலிருந்த—காலப் போக்கில் நாகரிக அவசரத்தினாலும், பொருளாதாரம் போன்ற காரணங்களாலும் உருக்குலைந்தும் பொலிவிழந்தும் சிதைவுற்றுப் போன—சிறு சிறு சடங்குகள் எல்லாம அறிமுகமற்ற அவனையும் அவளையும் கூச்சம் தெளிந்து பழகச் சந்தர்ப்பங்கள் ஏற்படுத்தும நிகழ்ச்சிகளே யாகும்.

புதுமைக் கூச்சம், நாணம், அச்சம் முதலியனதரும் கலவரங்களைத் துரத்தி சகஜமான பழக்க உணர்ச்சியைத் தர வல்லவை நலங்கு, ஊஞ்சல், அம்மானை, பல்லாங்குழி முதலானவை. இவற்றிலே மாப்பிள்ளையைக் கேலி செய்யப் பெண்ணின் தோழிகளுக்கும், பெண்ணைக் கேலி செய்ய மாப்பிள்ளைத் தோழர்களுக்கும் நிறையச் சந்தர்ப்பங்களும் உரிமையும் இருப்பதால், சிரிப்பு விளையாட்டு விமரிசைகளினாலே 'அயல், அந்நியம்' எனும் உணர்வு உதிர்ந்து விட இடமுண்டு.

இந்தச் சந்தர்ப்பங்களை தாமாக நினைத்து நினைத்து மகிழவும் மாப்பிள்ளைக்கும் பெண்ணுக்கும் வசதியிருப்பதால், பிறகு தனிமையில் கூடும் போது, பட்டணத்து

எக்ஸிபிஷனுக்குள் புதிதாகப் புகுந்த பட்டிக்காட்டானைப் போல அவனே அவளோ அதிகம் மிரள வேண்டிய அவசியம் எழாது.

வாழ்வுப் பாதையில் இணைக்கரம் கோத்து நடை போட விரும்புகிற இளம் தம்பதிகளுக்கு இன்ப எதிர்காலத்தையோ, அல்லது துன்பச் சூழலையோ முன் கூட்டியே அறிவுக்கும் மகத்தான சோதனைக் காலம் முதல் சில தினங்கள்.

இன்பக் கனவுகள் கண்டு வந்த யுவனுக்கும் ஆசைகள் வளர்த்து வாழ்ந்த யுவதிக்கும் இன்பத்தை வளர்க்கவும், இனிய வருங்காலத்தை ஆக்கவும் துணை புரியும் பொன்னொளி உதயமே 'முதல் இரவு'ம் அடுத்த சில தினங்களும்.

ஆணைப் பற்றிப் பெண்ணும், அவளைப் பற்றி அவனும் எடை போட்டு அழுத்தமான அபிப்பிராயம் கொண்டு விட வாய்க்கிற சந்தர்ப்பங்கள் இவை.

முதல் முறை பதிந்து விடுகிற கருத்துத் தான் பின் நாள் தோறும் வளர்ந்து பெரிதாகி இன்பம் பூத்துக் குலுக்கும் குளிர் தரு போலவோ, நச்சு வாடை வீசும் விஷ மரம் போலவோ மாற அஸ்திவாரமாகிறது,

மனித மனப்பண்பே அதுதானே? முதலில் கண்டதும் பதிகிற விருப்போ வெறுப்போ—அல்லது எந்த அபிப்பிராயமும்—மன மூலையில் நிலையாக நின்று விடுகிறது. பின்னர் நிகழும் ஒவ்வொரு சம்பவமும் ஆரம்ப கால அபிப்பிராயத்தை அழுத்தமாகப் பதிய வைக்கவே உதவுகிறது. முதலில் படிந்த அபிப்பிராயத்தை மாற்றுவது சுலபமல்ல. மாற்றிக் கொள்ள மனம் எளிதில் இணங்குவதுமில்லை. சரியான கருத்து ஏற்பட்டால் நல்லது. முதலில் விழுவது விரோத எண்ணமாக யிருந்தால் விபரீத விளைவு தான்.

சாதாரண பிஸினஸ் அல்லது நட்பு விஷயத்திலேயே இவ்விதமென்றால், வாழ்க்கைத் துணைகளாக இணைக்கப்

படுகிற ஆணும் பெண்ணும் சந்திக்கும் முதல் இரவும் அடுத்த சில தினங்களும் வாழ்வின் எத்தகைய முக்கிய சந்தர்ப்பங்கள் என்பது நன்கு புரியும்.

முதல் சந்தர்ப்பங்கள் தரும் எண்ணங்களின் தன்மையை உணரக் காலமும் அனுபவமும் துணை புரிய லாம். ஆயினும் அதற்குள் நாச விளைவுகள் எவ்வளவோ ஏற்பட்டு விடும்.

இவ்வித விளைவுகள் பிறக்காமலிருப்பதற்காகத் தான், கல்யாணத்துக்குப் பிறகு தான் காதலின் முக்கி யத்துவம் அதிகரிக்கிறது.

கல்யாணச் சடங்குகளும், கூட்டத்திடையிலும் ஒழிவு மறைவாகச் சந்திக்க முயல்வது, சந்திப்பது, பின் பிரிவது, மறுவீடு செல்வது முதலிய சம்பிரதாயங்கள் எல்லாம் புதிதாகக் கல்யாணமான ஆண் பெண்களுக்கு அன்பும் நட்பும் ஆசையும் அதிசயம் வளரத் துணை புரியும்.

கல்யாணமான புதிதில் எழும் ஆசையும் அன்பும் நீடித்து நிற்கும் என்று எதிர்பார்க்க முடியாது. ஆனால், அவை நீடித்து வளரும்படி செய்ய வேண்டியது கல்யாண மானவர்களின் பொறுப்பு.

ஒவ்வொரு கணவனும் தனது மனைவி அழகாக-அழகுக்கு அழகு செய்து கொண்டு வசீகரமாகத் திகழ வேண்டும்—புன்னகையுடனும் குன்றாத பொலிவுடனும் மின்ன வேண்டும்—என விரும்புகிறான், அவள் புதுப் பெண் போல — என்றும் புதுமை குன்றாதவளாக— கண்ணுக்கு நிறைந்த அழகாக உலவ வேண்டும் என அவாவுகிறான்.

கணவன் தன்னிடம் ஆரம்பத்தில் கொண்டிருந்த ஆசையுடனும் அன்போடும் என்றும் பழக வேணும் என மனைவி விரும்புவதும் இயற்கையே.

ஆனால் வீட்டில் நடப்பது என்ன?

ஸ்ரீமதி அழகு செய்து கொள்வதில்லை. தலை முடித்துப் பூ வைத்துக் கொள்வதில் கூட முன்பிருந்த

சிரத்தை இல்லாது போகிறது. 'வீட்டுக்குள்ளே இருக்கும் போது அழகும் அலங்காரமும் என்னத்துக்கு?' என்ற அலட்சிய மனோபாவம் வந்து விடுகிறது. பெட்டி நிறையப்பட்டாடைகளும் பிறவும் இருக்கும். அம்மாளோ அழுக்குச் சேலையும் பரட்டைத் தலையுமாகத்திரிவாள். கணவன் கூப்பிட்டால் கரிச்சட்டி தேய்த்தகையும், தூக்கி மடக்கிச் சுருட்டிக் கசக்கிய துணியுமாகவருவாள்.

கல்யாணமான புதிதிலும், முதல் ஒன்றிரு வருஷங்களிலும் தினமொரு அலங்காரம் நடந்திருக்கும். வேளைக் கொரு 'ஸேரி'யும், மணிக் கொரு தடவை ஸோப்பு போட்டு மூஞ்சி கழுவுதலும் தடபுடல் பட்டிருக்கும். உலையாத கூந்தலைச் சீவிச் சீவி அடிக்கடி பின்னி பூ வைக்கத் தவறுவதில்லை. பார்க்கிற பெண்கள் பொறுமைப் பட்டு 'என்ன அதிசயமம்மா! ஊரிலே உலகத்திலே இல்லாத புருசன் வந்து விட்ட மாதிரித் தான்! இப்படி அலங்காரமும் பகட்டும்!' என்று மூக்கில் விரல் வைத்துக் கொள்ளத் தூண்டும் வகையிலே அளவுக்கு அதிகமாக இருக்கும் 'மேக்கப்.'

பெண் அதிக அழகு செய்து மினுக்க வேண்டியது அந்தக் காலமல்ல. அப்போது கணவனுக்கு இயல்பாகவே புதுமை மோகம் இருக்கிறது. அவள் எப்படியிருந்தாலும், எப்படி நின்றாலும், என்ன பேசினாலும் எல்லாமே கவர்ச்சிக்கும் அழகுத் தூறலாகவே சிதறும். வருஷம் ஆக ஆகக் குறைகிறது அழகு. அவனது புதுமை மோகமும் போய் விடுகிறது. அவன் அவளிடம் காட்டும் அன்பு கூட மங்கி வருகிறது. அவ்விதம் நேராமல் தன் சாமர்த்தியத்தினாலும் சிரத்தையினாலும் காப்பாற்றிக் கொள்ள வேண்டியவள் பெண். குறைந்து வரும் அழகை நிறைவுறச் செய்ய ஆடை அலங்காரங்கள், மலர்கள் முதலியவை அணிந்து, புன்னகை, இன்பேச்சு, அன்பு முதலியன சூடிக் கணவனை வசமாக்குவதற்காக 'குழை யடிக்க வேணும்'. இதைப் பெண்களில் பெரும்பாலோர் உணர்வதில்லை.

அதனால் தான் கணவன் 'மூஞ்சியைப் பாரு.... மோறைக் கட்டையைப் பாரு' என்று வசை பாட வேண்டியதாகிறது. அதனாலேயே, அடுத்த வீட்டு இளம் பெண்ணைப் பார்த்து பெரு மூச்செறிகிறான். தெருவில் திரியும் மேனா மினுக்கிகளைக் கண்டு ஏங்குகிறான். அதனாலேயே, மினுக்கிப் பகட்டி, அந்த வேலைக்காவது இன் முகம் காட்டிக் குழையப் பேசும் விபசாரிகள், தாசிகள் வலையிலே சிக்குகிறான். இதனாலெல்லாம் குடும்ப அமைதி கெடுகிறது. இதை யெல்லாம் உணராத குல விளக்குகள் தம் தவறை மறந்து விட்டு 'லபோ லபோ' என்று அலறியடிப்பர். அதில் என்ன பிரயோசனம்?

ஸெக்ஸ் ஈடுபாடுகளில் பார்வை தரும் இன்பம் அதிகமானது. பார்வையின் சக்தியும் அதிகமானதுதான்.

கல்யாணமானவர்கள், கல்யாணமாகி ஒன்றிரு வருஷங்கள் கழித்து விட்டவர்கள் காலப் போக்கினால் மனக் கசப்பு பெற்று, பிளவு விதைத்து வருகிறவர்கள் அனைவருக்கும் அதிகத் தொல்லை தருவது 'செக்ஸில் பார்வை' எனும் பண்பு தான்.

ஆரம்பத்தில் பரஸ்பரம் பார்த்துக் கொண்டே யிருக்க விரும்புகிறவர்கள், ஒரு கோணத்திலோ முழுப் பார்வையிலோ திருப்தி யுறுகிறவர்கள் பிறகு ஒவ்வொரு அங்க அசைவிலும் குறையைத் தான் காண நேரிடுகிறது. பரஸ்பரம் கண்களுக்கு நிறைவு தரும்படி சாதுர்யமாக அழகு படுத்திக் கொள்வதிலும், அழகு கெடாமல் காத்துக் கொள்வதிலும் கவனம் செலுத்த வேண்டும்.

பெண்களின் அறியாமைகளில் எல்லாம் மிக உயர்ந்த முட்டாள்தனம், அவர்கள் வீட்டில், புருஷன் முன் நடமாடுகிற போது அழகு படுத்திக் கொள்ள விரும்பாததும், சினிமாவுக்கு—திருவிழாவுக்கு—கல்யாண வீடுகளுக்கு—பொதுவாக வெளியே எங்காவது போகும் போது அதிக சிரத்தையுடன் அலங்காரம் செய்து மினுக்கித் திரிவது தான்.

இதனால் 'எவனை மயக்க இப்படிப் பெருமையாய் போறாளாம்!' என்று மனம் குமுற சேர்கிறது. வீட்டிலே தன் பார்வைக்கு அழகாக நடமாட ஆவல் கொள்ளாதவள், தெருவில் போவோர் வருவோர் கவனத்தைக் கவரும்படியாக மினுக்கித் திரிவதைக் கண்டு கணவன் சீறுகிறான். வெறுப்புக் கொள்கிறான், 'இவளுக்கு எதுக்கு இந்தத் தேவடியாத்தனம்?' என்று கசந்து கொள்கிறான். கசப்பு முற்றியதும் 'தேவடியா முண்டை! தட்டுவாணிச் சிறுக்கி!' என்று நேரடித் தாக்குதல்கள் பிறக்கின்றன. இவ்வளவு தூரம் முற்ற விடாமல் குடும்ப அமைதியையும் கணவனின் ஆனந்தத்தையும் காக்க வேண்டியது கல்யாணமான பெண்களுக்கு என்றுமுள்ள கடமைகளில் ஒன்று.

* * *

செக்ஸ் ஈடுபாடுகளில் பார்வை, வாசம் நுகர்தல், ஸ்பரிசம் முதலிய இன்ப உணர்வுகளைப் போலவே, ஒலியும் இனிமை வளர்க்கும் பண்பாக விளங்குகிறது.

ஆண் பெண்ணைப் பார்க்கிறான். பெண் ஆணைப் பார்க்கிறாள். பரஸ்பரம் பார்த்து, மகிழ்ந்து, புன்னகைத்து, வாடை பிடித்து இன்புறும் போதே ஒலி தனது வேலையைச் செய்கிறது

தனக்குப் பிடித்த பெண்ணின் பட்டுடை மெல்லொலியையும் சரசரப்பையும், வளைகளின் கலகலப்பையும் மிகவும் ரசிக்கிறான் ஆண் அவளது மென்மூச்சையும் மெல்லொலிச் சிரிப்பையும், பேச்சையும் கலகல நகைப்பையும் கேட்கத் தவிக்கிறான். கேட்டுப் புளகிதம் அடைகிறான். எந்தச் சரசரப்பு, கலகலப்பு, கலீன் சிரிப்பு, மெல்லொலியாயினும் அவை உடனடியாக அவனுக்கு அவனது மனமோகன மயிலியைத் தான் நினைவுக்கு இழுக்கின்றன. அவற்றிலே கவிதை இன்பம் காணும் அவன் சதா அவற்றைக் கேட்டு ரசிக்கத் துடிப்பதில் வியப்பில்லை.

அவளும் அப்படியே.

அவனும் அவளும் சதா பேசிச் சிரித்து மகிழ விரும்புகிறார்கள். கேலி செய்து கலகலக்க ஆசை கொள்கிறார்கள். அர்த்தம் இருக்கிறதோ, இல்லையோ, அவர்கள் பேச்சில் இன்ப மிருக்கிறது. அதை எப்பொழுதும் சுவைக்கத் துடிக்கிறார்கள்.

கல்யாணமான புதிதில், இளம் தம்பதிகள் தனிமையில் அருகருகே யமர்ந்து பேசிக் கேலி செய்து வம்பளந்து சிரித்து இன்புறுவது சகஜமான நிகழ்ச்சி.

மணாளன் தன் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டுக் கொஞ்சுவதை அவள் மிகுதியும் விரும்புகிறாள். அந்த அழைப்பிலே, அவன் நாக்கு சிந்தும் ஒலி இனிமையிலே, சொக்கி விடுகிறாள். அவன் மெதுவாக, அழுத்தமாக, ரகசியமாக, ரசித்துக் கூறும்போது—இப்படி அடிக்கடி அவளை அழைப்பதில் அவனுக்கும் இன்பம் பிறக்கிறது—அவளும் இன்ப வானிலே நீந்தும் பட்டமாகி விடுகிறாள்!

இதெல்லாம் புதுமை மோகம் கிறக்குகிற போது, போகப் போக என்னுகிறது?

அன்றாட அலுவல்கள் அதிகரிக்கும்போது, பொறுப்பும் கவலைகளும வளரும் போது, பேசுவதற்கு நேரமும் பொறுமையும் இல்லாமல் போய் விடுகிறது பலருக்கு. வெளியுலகக் கவலைகள் அரிக்கும் போது, வீட்டிலும் அவள் குற்றங்குறைகளை முணமுணத்தால், அது கழுத்தறுக்கும் தொணதொணப்பாகத் தான் தொனிக்கும். வீட்டு வேலைகளும் உறவினர் பிடுங்கல்களும் மிகுந்து அவள் வாழ்க்கையே பெருஞ் சுமை என்று புழுங்கும் போது அவன் கேலியும் கிண்டலும் பேசத் துணிந்தால் அவளுக்கு எரிச்சல் தான் எழும்

சூழ்நிலைகளும் பிறவும் விதைக்கிற சிறு குறைகளையோ, பெருந் தொல்லைகளையோ, மறக்கவும், ஒரு சிறிது இன்பமாவது காணவும் கணவன் மனைவியின் அன்பு துணை நிற்கும்.

தாம்பத்ய வாழ்வில் ஈடுபட்டுப் பல வருஷங்களானாலும் சரி. கணவன் மனைவியிடம் அன்பும், மனைவி கணவனிடம் அன்பும் காணிக்கையாக்கி காதல் வாழ்வு வாழ வேண்டியது இன்ப வாழ்வுக்கு முக்கியமானது.

இப்படிச் சொல்லும் போது, கணவனும் மனைவியும் சினிமாக் காதலன் காதலி போல ஓடிப் பிடித்து விளையாட வேணும். கட்டியணைந்து கண்ணாமூச்சி யாடி காதல் கீதம் பாடவேணும் என்று குறிக்கவில்லை.

கல்யாணமான புதுசில், புதுமாப்பிள்ளைக்கு தன் இளம் மனைவியை அடிக்கடி காண வேண்டும், அவள் அலைவீசும் மணம், 'பட்டுடை வீசு கமழ்தல்' முதலியவைகளை நுகர வேண்டும் அவள் பேச்சை, சிரிப்பை, உளறலை எல்லாம் ரசிக்க வேண்டும்—என்ற ஆசை அதிகமிருக்கும். இவற்றின் பயனாக அவளைத் தொட வேண்டும், அருகணைய வேணும். அவளைத் தொட்டுப் பிடித்து, வருடி யணைந்து அவளது மேனியின் மென்மையை, நயங்களை, இளமையை, பெண்மையை உணர வேண்டும் எனும் அரிப்பு மிகுந்து நிற்கும். ஆளனின் வலிமையையும் வனப்பையும் உணரும் துடிப்பு அவளுக்கு மிருக்கும்.

ஆணும் பெண்ணும் கல்யாணமான பிறகு காதல் புரிய வேண்டியது அவசியம் என்று குறிக்கும் போது, புதுமை அரிப்பிலே அவர்கள் ஆடித் தீர்க்கும் 'சில்லுண்டி விஷமங்களை' என்றும் விளையாடிக் களிக்க வேண்டும் என்று சொல்லவில்லை.

பெண்ணையே பார்த்துக்கொண்டிருப்பதில் புதுமாப்பிள்ளைக்கு தனி 'இன்ட்ரஸ்ட்' இருக்கலாம். ஆணழகை அள்ளி விழுங்குவதில் மணமகளுக்குத் தனிமகிழ்வு உண்டு ஒருவரை யொருவர் இடித்துக் கொண்டுபோவது, உரசி விட்டு ஓடுவது தொட்டு விட்டுச் சிரிப்பதி லெல்லாம் சந்தோஷம் காணலாம்—வாழ்வின் ஆரம்பத்திலே !

இவ்வித இளம் பருவ ஆடல்களைக் காதல் என்று குறிப்பிட வில்லை நான்.

நாகரிகம் முற்றிப் போன அமெரிக்கா, இங்கிலாந்து முதலிய நாடுகளில் கணவனும் மனைவியும் தினந்தோறும் பலதடவைகள் 'ஐ லவ் யூ....ஐ லவ் யூ' (நான் உன்னைக் காதலிக்கிறேன்....நான் உன்னைக் காதலிக்கிறேன்) என்று சொல்ல வேண்டியது அவசியம் என்று கருதுகிறார்கள்.

திடீரென்று நினைத்துக் கொண்டு கணவன் 'உன்னைக் காதலிக்கிறேன் என்று இன்றைக்கு உன்னிடம் சொன்னேனா, அன்பே?' என்று கேட்பான். அவன் சொல்லியிருந்தால், 'ஆமாம், உங்களை நான் எவ்வளவு நேசிக்கிறேன் தெரியுமா!' என்று அவர்கள் பாஷையில் புலம்பி விட்டு, 'இச்'செனக் கொத்துவாள் ஒரு முத்தம்.

அப்படி அவன் சொல்ல மறந்து விட்டால், நீ என்னைக் காதலிக்க வில்லை' என்று சிணுங்கி, சண்டைக்குக் கொடி கட்டுவாள். அவளாகவே தொடங்கி விடுவதும் உண்டு!

இந்த ரகமான அமெரிக்கத்தனம் தேவையே யில்லை. நாடகமேடை ரீதியான கேள்வி பதில்களும், சினிமா ஸ்டைல் வசன உதிர்ப்பு, ஒட்ட ஆட்டங்களுமா உண்மையான அன்பை—வாழ்வின் இனிமையை—உணர்த்துவன?

கல்யாணமான பின்னரும், மணவாழ்விலே காதல் தேவை என்று சொல்லும் போது, வாழ்வில் புதுமைச் சுவை குன்றாமல், அலுப்புத் தட்ட இடம் கொடாமல், அன்பு பரிமாறி, சுயநலத்தைச் சிறிதகற்றி கணவன் மனைவியின் நலத்தையும், மனைவி கணவன் நலத்தையும் மதித்து, இருவர் மனமகிழ்வுக்கும் தேவையான காரியங்களைச் செய்ய வேண்டியது இன்பமனுபவிக்க அவசியத் தேவை என்றே குறிக்கிறேன்.

மனைவி தன் அழகு குலையாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். இல்லாத அழகையும் கலை நயத்தால் இருப்பது போல் எழிலுறக் காட்டி, கணவனுக்கு மகிழ்வூட்ட வேண்டும்.

அவன் அலுத்துப் போய் வீடு திரும்புவான். வீட்டிலே அன்பாக உபசரித்து, இன் முகம் காட்டி, இனியன

பேசிப் பொழுது போக்கலாம் என்று வருவான். அந்த நேரத்துக்கு அவள் கதவை இழுத்துச் சாத்தி விட்டு, அடுத்த வீட்டில் போய் வம்பளந்து கொண்டிருந்தால்? அல்லது எதையாவது நினைத்துக் கொண்டு மூஞ்சியை 'உம்' மென்று தொங்கப் போட்டு, அவனுக்குச் சரியான பதில் சொல்லாமல் சிணுங்கினால்?

'ஏன் தான் வீட்டுக்குச் சீக்கிரம் வந்தோம்!' என்ற எண்ணமே எழும் கணவனுக்கு.

கணவனும் மறக்கக் கூடாது, தன் வருகை நோக்கிக் காத்திருப்பாள் தன் மனைவி. தனக்காக வீட்டில் ஆவன செய்து தன் வாழ்வைப் பேணும் குலச் சுடர் என்பதை. மனைவி, வீட்டில் அவர் வருவார், வருவார் என்று எதிர் பார்த்திருக்கும் வேளையில் அவன் நெடுகச் சுற்றி விட்டு, நேரங் கழித்து வந்தால், ஆவலுடன் காத்திருக்கும் அவளுக்குத் தான் எப்படி யிருக்கும்?

அவள் தன்னை நம்பி யிருப்பவள்; தனது வாழ்வின் வாழ்வு; தனது இல்லத்து விளக்கு என்பதை மதித்து அவன் அவளை அன்புடன் மதித்து அவள் தேவைகளை கவனித்து அவளை மகிழ்வுறுத்த வேண்டும். அவன் தனது துணை, தன் வாழ்வின் சிறப்பு, இன்பத்துக்கு ஒளி என்பதை உணர்ந்து அவளும் அன்புடன் வாழ்வில் ஈடுபட்டு அவனுக்குத் தக்க துணைவியாய் திகழ வேண்டும்.

மனைவி கேட்டுக் கேட்டுத் தான்—அவள் கேட்ட பிறகே—எதையும் வாங்கிக் கொடுக்க வேண்டும் என் றிருப்பதை விட, தானாகவே முந்திக் கொண்டு அவளுக்கு இது தேவை என உணர்ந்து வாங்கி அளித்தால் அவளுக்கு அவனிடம் அன்பும் ஆசையும் மதிப்பும் அதிகரிக்கும். தேவை சமயம், பொருள் சௌகர்யம் இவற்றை அனுசரித்து, ஆடை அணிகள், வீட்டுத் தேவைகளை முன்னதாய் தானாகவே வாங்கி அளிப்பது அவளுக்கு மிக மகிழ்வு தருவதைப் போலவே, அவ்வப்போது புஷ்பம் முதலிய அழகுச் சாதனங்களை அவனாகவே தரும் பொழுது அவள் மிக மகிழ்ச்சி யடைகிறாள்.

புது மணத் தம்பதிகளாக யிருந்த போது காட்டுகிற அக்கறை வரவர அலட்சியமாகத் தேய்ந்து விடுகிறது வாழ்வில். அவ்வாறு தேய விடக் கூடாது. முன்பு தினம் பூ வாங்கிக் கொடுப்பதோடு நில்லாமல், அவள் கூந்தலில் தானுகவே சூட்டவேணும் என்று துடிக்கிறவன் காலப் போக்கில் மனைவியாகப் பூ வேண்டும் என்று கேட்டாலும் வாங்க மனமிசைவதில்லை. அது அவள் மனதை அறுக்கும் போது, 'நீ இருக்கிற லெட்சணத்துக்கு உன் தலைக்குப் பூ வேறே! மோறைக்குப் பவுடரும் சோப்பும் வேறே வாழுது! என்று எரிந்து விழுந்தால் அவள் மனம் குமுறவே செய்வாள். அடிக்கடி சிந்தப்படும் சுடு சொல் அவள் இளஉள்ளத்தில் உறையும் அன்பைத் தீய்த்து விடுகிறது.

எரிந்து விழுவானேன்? அன்பாகப் பேசக் கூடாதா? அவள் வந்த புதிசில் அவனுக்கு ஏற்பட்ட உற்சாகத்தையும், செய்த உபசரணைகளையும், அவள் செய்த கடமைகள் உபசரிப்புகள், காட்டும் அன்பு இவைகளையும் எண்ணினுல் அவரவர் தவறு புலப்படாமலா போகும்?

இனிய வார்த்தைகள் கூற இயலும் பொழுது, எதையாவது எண்ணிக் கொண்டு வாழ்க்கைத் துணை பேரில் கோபத்தைக் காட்டுவது அவனுக்கோ அவளுக்கோ நல்லதல்ல. அது அறிவுடைமையும் ஆகாது.

பெண்ணும் 'பொழுது போக்கு' இன்பம் பெற விரும்புகிறவள். அவளுக்கும் ஊரில் 'ஆடுைப்படும்' சினிமா, நாடகம் முதலியவற்றைக் காண ஆசை இருக்கும் என்பதை உணர்ந்து மனைவியை அவ்வப்போது சினிமாவுக்கு அழைத்துச் செல்வதன் மூலம் அவள் மகிழ்வுக்கும் திருப்திக்கும் கணவன் துணை செய்வதோடு, அவள் அன்பை அதிகம் பெறவும் முடியும். அதற்காக அடிக்கடி சினிமா, நாடகங்களுக்குப் போக வேண்டும் என்று பெண் முரண்டினுல், அது கணவன் பொறுமையைப் பரீட்சிப்பதே யாகும். அதனுல் அவள் தனக்கு நன்மை செய்தவளாக முடியாது.

பெண்களுக்குத் திருவிழாப் பார்ப்பதில், அதிக ஆர்வமிருக்கலாம். தன்னால் அழைத்துச் செல்ல இயலாதெனினும், பல பெண்களோடு கூடச் சேர்ந்து போவதை அனுமதிக்கும் தாராளம் சிறிதாவது வேண்டும் கணவனுக்கு.

பெண்களுக்குப் பிறந்தகத்துப் பெருமை அதிகம். பிறந்த வீட்டுப் பற்றுதலும், பிறந்த வீடு செல்ல வேண்டும் என்ற துடிப்பும் அதிகம். இது பெண்களின் தன்மைகள் என்று கருதினாலும் சரி. தவறுகள் என்று மதித்து மன்னித்து விட்டாலும் நல்லதே. மனைவி எப்பொழுதாவது பிறந்தகம் செல்ல மிகுதியாக ஆசைப்பட்டால் அவளுக்கு மகிழ்வுடன் அனுமதி யளிப்பதன் மூலம் கஷ்டமோ நஷ்டமோ எழாது. ஆனால் போக விடாமல் கண்டிப்பு பண்ணினால், அவளுக்கு அவசியம் மனக்குறை எழும். அது வாழ்வில் பிரதிபலிக்காமல் போகாது.

அவள் பெருமையாக மதிக்கிற பிறந்த வீடு, அதன் சிறப்புகள், உறவினர்களைப் பற்றி சந்தர்ப்பங்களிலும் அசந்தர்ப்பங்களிலும் மட்டம் தட்டி, மண்டையிலடித்து அவளைத் தலை குனியும்படி செய்ய வேணும் என்ற துடிப்பு கணவனுக்கு அழகு தருவது மல்ல. வீட்டில் அமைதிக்கு வழி செய்வது மல்ல.

அதற்காக மனைவியும் எடுத்ததற்கெல்லாம் 'எங்க வீட்டிலே அப்படி....எங்க வீட்டிலே இப்படி' என்று பீத்திக்கொண்டு திரிவது சரியாகாது. அடிக்கடி அம்மா வீட்டுக்கு ஓடுவதும் அழகல்ல. கல்யாணத்துக்குப் பிறகு கணவன் வீடு தன்னுடைய வீடாகி விட்டது; அதனால் 'எங்க வீடு....எங்க வீடு' என்று எங்கேயோ தனக்குச் சொந்தம் பாராட்ட வேண்டிய அவசியமில்லை என்பதை உணர வேண்டும்.

பொருளாதாரம் இடமளிக்குமானால், மனைவியை அழைத்துக் கொண்டு புது இடங்களுக்குப் போய் வருவதன் மூலம் இருவருக்கும் புதிய உற்சாகமும் மனமகிழ்ச்சியும் உண்டாக்கிக் கொள்ளலாம். நாட்டின் முக்கிய இடங்கள், சரித்திரப் பிரசித்தி பெற்ற ஸ்தலங்

கள், கலைச் சின்னங்கள் திகழும் இடங்கள் முதலியவற்றுக்கு அவளையும் உடன் அழைத்துப் போனால், அவளுக்கு தான் தனியள், துணையற்றவள், அலட்சியப் படுத்தப்படும் பெண் என்பன போன்ற தாழ்ந்த மனோபாவ எண்ணங்கள் எழ இடமிரா அத்துடன் தன்னிடம் பிரியம் காட்டும் கணவனிடத்தில் குறையாத அன்பும் வளரும்.

மனைவியின் பிறந்த நாள், தங்களுக்கு மணம் நிகழ்ந்த தினம், தங்கள் வாழ்வில் முக்கியமான தினங்கள் இவைகளை விசேஷமாகக் கருதி மகிழத் தயங்கக் கூடாது. வாழ்வின் இனிமைகளைப் பற்றி—கடந்த கால வாழ்வின் இன்பச் சாயைகள் பற்றி—மறக்க முடியாத விஷயங்களைப் பற்றி—மனம் விட்டுப் பேசி மகிழ மறக்கக் கூடாது. இடைவெளி குறைந்து, மனப்புழுக்கம் இல்லாமல் போகவும்—வாழ்வின் வறட்சியையும் கானலையும் போக்கவும்—இத்தகைய பொழுது போக்குகளும் இன்பச் சிறு பொழுதுகளும் தேவை தான்.

இவை சிறு விஷயங்களாகத் தான் தோன்றும். ஆனால் வாழ்வையே பாதிக்கக் கூடிய பெரிய நெருக்கடிகளை உண்டாக்கும் அளவுக்குத் திரண்டு விடக் கூடியவை. வாழ்வின் நெருக்கடிகளைத் தவிர்ப்பவைகளும் கூட.

தன்னை கணவன் மறந்தானோ, மிஞ்சினானோ கருதவில்லை என மனைவிக்கு நிரூபிக்கும் பண்புகள். மனைவி தன்னிடம் அன்பு குன்றி, வாழ்வில் அலுப்புற்று விடவில்லை, அவள் வாழ்விலும் தன் வாழ்விலும் ஒளி தருகிற சுடர் தான் என்று கணவனுக்கு உறுதி கூறும் இன்ப விஷயங்கள் இவை.

இவை அன்பில் மலர்ச்சி, இளமை குன்றாத காதலின் அழகுக் கதிர் வீச்சு, வாழ்வின் தேவை. இவற்றை மறந்து விடக் கூடாது கல்யாணம் செய்து கொண்ட ஆணும் பெண்ணும்.